பயின்று வரும். ஒருமை சுட்டிய பெயர்நிலைக்கிளவி பன்மைக் காதலும், முன்னிலையொருமை பன்மையொடு முடிதலும் அன்னவன்றிச் சிறுவழக்கின வாதலின், ஆண்டு வையாது ஈண்டு வைத்தார்.

ஒருவர் ஒருவரை ஆற்றுப்படுத்தற்கண் முன்னிலை யொருமை பன்மை யொடு முடிதல் வழக்கிற்கும் ஒக்குமாகலான், ஆற்றுப்படையெனப் பொது வகையாற் கூறினர். ( )

### எ. சொல்லதிகாரத்திற்குப் புறனடை

**இருவகை வழக்கினும் நூல்வழக்கின் முதன்மை**

**சசாந. செய்யுண் மருங்கினும் வழக்கியன் மருங்கினு**
**மெய்பெறக் கிளந்த கிளவி யெல்லாம்**
**பல்வேறு செய்தியி னூனெறி பிழையாது**
**சொல்வரைந் தறியப் பிரித்தனர் காட்டல்.**

இ - ள் : செய்யுளிடத்தும் வழக்கிடத்தும் இவ்வதிகாரத்தின் கட் பொருள்பெறச் சொல்லப்பட்ட சொல்லெல்லாவற்றையும் பல வேறு செய்கையுடைய தொன்னூனெறியிற் பிழையாது சொல்லை வேறுபடுத்துணருமாற்றாற் பிரித்துக் காட்டுக; எ - று.

என்றது, 'நிலப்பெயர்' குடிப்பெயர் எனவும், 'அம்மா மெம்மேம்' எனவும் பொதுவகையாற் கூறப்பட்டன. அருவாளநிலத்தானென்னும் பொருட்கண் அருவாளன் எனவும்; சோழநிலத்தானென்னும் பொருட்கண் சோழியன் எனவும்; இறந்தகாலத்தின்கண் உண்டனம், உண்டாம் எனவும்; நிகழ்காலத்தின்கண் உண்ணாநின்றனம், உண்ணாநின்றாம், உண்கின்றாம் எனவும்; எதிர்காலத்தின்கண் உண்குவம், உண்பாம் எனவும் வேறுபட்டு வருமன்றே; அவ்வேறுபாடெல்லாம் கூறிற் பல்குமென்றஞ்சிக் கூறிற்றில ராயினும், தொன்னூ னெறியிற் பிழையாமல் அவ்வேறுபாடுணரப் பிரித்துக் காட்டுக நூல்வல்லா ரென்றவாறாயிற்று.

இது பிறநூன்முடிந்தது தானுடம்படுதலென்னுந் தந்திரவுத்தி. பிறவுமன்ன.

செய்கை - விதி.

சொல்வரைந்தறிய வெனவே, வரைந்தோதாது பொதுவகையா னோதப் பட்டவற்றின்மேற்று இப்புறனடையென்பதாம்.

இனி ஒருரை :—செய்யுளிடத்தும் வழக்கிடத்தும் என்றாற் கிளக்கப் படாது தொன்னூலாசிரியராற் கிளக்கப்பட்டு எஞ்சிநின்ற சொல் லெல்லா வற்றையும் அவ்வத் தொன்னூனெறியிற் பிழையாமைச் சொல்லை வரைந் துண ரக்கொணர்ந்து பிரித்துக்காட்டுக என்றவாறு.

என்றாற்கிளக்கப்படாது என்பது பெற்றவாறென்னை யெனின் :— கிளந்தன பிறநூலிற்கொணர்ந்து காட்டல் வேண்டாமையிற் கிளக்கப்படா தன வென்பது பெறப்படுமென்க.

புறனடையாற் கொள்ளப்படுவன:—யானு நீயு மவனுஞ் செல்வேம் எனவும், யானுநீயுஞ் செல்வேம் எனவும் வினையிடத்திற்குரிய சொற் றன்மைச் சொல்லோ டியைந்தவழித் தன்மையான் முடிதலும், அவனுநீயுஞ் சென்மின் எனப் படர்க்கைச்சொன் முன்னிலையோடியைந்தவழி முன்னிலையான் முடிதலும், 'நில்லாது பெயர்ந்த பல்லோருள்ளும்' என்புழிப் பல்லேமுள்ளுமெனத் தன்மையாகற்பாலது பல்லோருள்ளுமெனப் படர்க்கைப் பன்மையாயவழி அமைதலும்,

'முரசுகெழு தானை மூவ ருள்ளு,
மரசெனப் படுவது நினதே பெரும'

(புறம்-௩௫.) என்புழி மூவிருள்ளுமென முன்னிலையாகற்பாலது மூவருள்ளுமெனப் படர்க்கையாயவழி அமைதலும், 'இரண்டனுட் கூர்ங்கோட்ட காட்டுவல்' என்புழிக் கூர்ங்கோட்டதென ஒருமையாகற்பாலது கூர்ங்கோட்டவெனப் பன்மையாயவழி அமைதலுமாம். பிறவு முளவேற் கொள்க.

அகத்தியமுதலாயின எல்லாவிலக்கணமுங் கூறலிற் பல்வேறு செய்தியினூலென்றார்.

இவ்விரண்டுரையும் இச் சூத்திரத்திற் குரையாகக் கொள்க.

எச்சவியல் முற்றிற்று.

சொல்லதிகாரச்சேனாவரையருரை

முற்றுப்பெற்றது.

மெய்கண்டதேவன்றிருவடிவாழ்க.

# சூத்திர முதற்குறிப்பகராதி